## 4—3. வீம பாச திடர் கதை.

இதுநமக் கிதுந மக்கென் றிரங்குறு பொல்லா வாழ்வா
லுதவியோர் சாம்ப ரேனு முறப்பெறு தாதார மக்குச்
சுதமுறு மூலக மெல்லாத் துரும்புபோற் காண்போர் தம்பால்
விதநக்க ளனைத்தும் வாரா மிருகங்க ளுலர்புற் றீண்டா. 1

உளத்துறாச் சமக்கா ரஞ்சே றுண்மையை யுணர்வோர் தம்மை
யளக்கரும் பிரமாண் டம்போ லட்டதிக் காளர் காப்பர்
இளப்பருங் குணத்தி லன்பாய்க் கேள்வியில் விருப்பா யுண்மை
விளக்குறு வருத்த மிக்கோர் நரர்நின் றோர் மிருகந் தானே. 2

செயலருந் துயருற் றாலுஞ் செயத்தகாச் செயல்க ளாகா
வியல்பலா வழியா லுண்ண விராகுவை யமுதங் கொன்ற
தயலெலாம் வசமா யாபத் தனைத்தும்போ மென்று நன்று
முயலுநற் குணங்க ளாலே மொய்புக ழெய்தி னோர்க்கே. 3

ஒழிவறு முயற்சி தன்னா லூகத்தா லுயர்ந்த நூலா
விழிவற வியற்று வோர்கட் கெப்பய னெளிதி னெய்தா
வழிபடு நன்னூ லாளர் வருபயன் கருத்தாச் செய்யி
லழிவற முற்று முற்றி யளவறு பயனை நல்கும். 4

வருத்தமற் றச்சஞ் சோக மதமின்றி நன்னூற் பின்போ
யொருத்தரா லேவ லின்றி யுலாவுக நசிக்க வேண்டா
வருத்தங்க ளகர்த்த மாகு மளவில்போ கங்க ளேயாம்
பெருத்தவா பத்தாஞ் செல்வம் பேரின்ப நிராசை தானே. 5

இடும்பைகூர் சங்க மின்றி யியற்கையா சார மெய்திக்
குடும்பமாந் துயர்சிற் றின்பங் குறித்திடாப் பெருமை யோர்க்கு
நெடும்புகழ் வாணாள் செல்வ நிறைகுண மனைத்து முண்டாய்ப்
படும்பலன் வசந்த காலக் கொடிகள்போற் பலிக்கு மன்றே. 6

தவங்களாற் றெய்வ நீராற் சாத்திரங் களினுற் போகாப்
யவங்களை யுயர்ந்தோர் பாதம் பணிந்துபற் றறுக்க வேண்டு
மவங்களாங் காமங் கோப மரவுந்தேய்ந் தியற்கை யான
சுவங்களி னடந்து நன்னூற் றுறைநின்றோ ருயர்ந்த மேலோர். 7

நானெனும் பொருள்கா ணாதோர் ஞானவா காயங் காணார்
நானெனும் பொருளைக் கண்டோர் ஞானவா காய மாவார்
நானெனு மகங்கா ரக்கார் ஞானவிண் மதியை மூடி
றப் பரம வாம்ப னன்மலர் விரியா தன்றே. 8

மடிவறு பிறவி யென்னு மாத்திர ளனதி தென்னு
நெடியபல் பணைக ணீட்டி நிரயமாங் காய்கள் காய்க்கு
முடிவறு துயராங் கார முளையாக விளையா நிற்கு
மிடியிலா ஞானத் தீயால் வேரொடும் வெந்து போமே. 9

என்றலு மிவ்வாங் கார மெவ்வுரு வுடைத்தெவ் வாறு
வென்றிட லாகுந் தேக மேவியு மேவா தாயு
நின்றொரு காலம் வென்றோ னேருறு பயனே தென்று
நன்றுணர் வள்ளல் கேட்ப ஞானமார் வசிட்டன் சொல்வான். 10

மூவகை யுலகி லிந்த வகங்கார மும்மை யென்று
மேவரு மிரண்டு நன்றா மிகவுமொன் றீன மாகும்
யாவதும் பாமு நாமே யீறில மெய்மைய லாதோர்
பாவனை யிலதென் றோரும் போதமே பரமாங் காரம். 11

செந்நெல்வா லினுஞ்சற் றாகிச் செகங்களுக் கயலா யென்று
மன்னுது மெனக்கொள் போத மற்றையாங் கார மாகு
மிந்நிலை யிரண்டுஞ் சீவன் முத்தர்பா லிருந்தி டேற்றித்
துன்னரு முத்தி நல்குஞ் சுழல்வுறு பந்த நல்கா. 12

காசற ஞானி மட்டா நாணிது வென்ற காணுந்
திரமது தானே மூன்றா மகங்காரஞ் செகத்தோர்க் கெல்லா

மூரியதா மிகவும் பொல்லா துற்பவ மென்னு நச்சு
மாமெழு மூல மாகும் வருந்தியு மொருக்க வேண்டும். 13

கொடிதிது கொடிது சாலக் கொடிதிதன் கொடுமை யாலே
முடிவறு முயிர்க ளெல்லா மோகமுற் றறிவு கெட்டார்
கடிதிலவ் விரண்டி ஞலுங் கடிந்திதெவ் வளவு விட்டாய்
படிவுறவ் வளவே யெய்தும் பரமமாந் தற்ப தார்த்தம். 14

எற்றமா மகங்கா ரங்க ளிரண்டி னுற் பரம மெய்தி
யூற்றமா மவற்றை நீக்கி யோரகங் கரமு மின்றி
யாற்றலா னிற்றி யென்னி லறவுயர் பதம தாகுந்
தோற்றுட ளுனை ளுமை சுருதிகள் சொல்லு முத்தி. 15

இதனியல் புரைக்கக் கேண்முன் னிசைத்துள தாமன் முன்னோ
ரதமுற மடிந்த பின்ன ரனையசம் பரன்வே கித்து
மதமுறு மிமையோர் சேனை வதஞ்செய்வா னுபாயந் தன்னை
விதமுற வினைய வாறு நினைந்தனன் விஞ்சை வல்லான். 16

தானவ ரனமுன் ஞஞ்செய் தாமனை முதலா மூவர்
ஞானமில் லாமை யாலே நானெனை தென்று பொய்யாய்
வானவர் போரின் மாண்டார் மற்றினி ஞான னன்னூற்
போனவர் விவேகத் தோராய்ப் புணர்ந்தமா யத்தாற் செய்வேன். 17

மெய்யுணர் வுறுத லாலே வெறும்பொய்யா மகங்கா ரத்தி
னையுறூர் விணர்னோர் சேனை நலிவுற வெல்வ ரென்று
மையுறு மநத்தி னெண்ணி மாயையா லவரைச் செய்தான்
மொய்யுறு வேலை தந்த மொக்குள்போன் மூவர் வந்தார். 18

அனைத்தையு மறிந்தோர் தம்மை யறிவெனு வறிவாற் கண்டோர்
வினைத்தொட ரிலாதோ ரொன்றின் விருப்பமும் வெறுப்பு மில்லோர்
நினைத்துள நிகழ்கா லத்தி லெய்திய நிலையி னிற்போர்
தினைத்துணை யெனினு மைய மிலாதவர் தெளிவு சான்றோர். 19

பேரினான் வீமன் பாசன் றிடனெனப் பிரிக்கப்பட்டோர்
சீரினா லுலகை யெல்லாந் திரணமாய்த் தேருஞ் சத்தர்
போரிலே போயி னென்ற சம்பரன் பகலப் போதி
நேரிலா வமர ரோடு நெடுஞ்சமர் புரிய லுற்றார். 20

எண்ணிலா வருடம் வெம்போ ரியற்றின ரிவர்க ணெஞ்சிற்
றுண்ணென வெனதி யானுந் தோற்றா வதித்த போது
நுண்ணறி வாலே யாமா ரென்றுற நோக்க லோடும்
புண்ணிய மிலாதோர் வாழ்வு போலது பொய்யாய்ப் போகும். 21

பன்மையாம் விசாரத் தாலே படரகங் கார மற்றோர்
சன்மமே மரண மேயென் றஞ்சுறு சலிப்பி லாதோர்
நிர்மல ரொளிதின் வந்த பொருள்கொள்வோர் நிகழ்ந்த வெல்லாந்
தொன்மையா நவமாங் கண்ணுற் றுகளறச் சமமாய்க் காண்போர்.

ஆதலால் வீர ரான வவர்களா லமரர் சேனை
காதலாற் புசித்து மாய்க்குங் காமுகர் செல்வம் போலப்
போதலே புரிந்து திக்கிற் போயொளித் துலக முண்ட
மாதவா சரண மென்றே மாயனைச் சேர்ந்த தன்றே. 23

அடைக்கலம் புகுந்த வானோர்க் கஞ்சலென் றபய நல்கி
விடைத்துவந் தமரின் மோதும் விணடவோ டரும்போர் செய்து
படைக்கல நேமி யேவப் பாய்கண நீய்க்கத் தீய்ந்து
தொடைத்துழாய் மார்பன் வாழுந் தூயவை குந்தம் புக்கார். 24

மற்றினி யிந்த வாற்றால் வாதனை யாலே பந்தம்
பற்றுறு மதனை நீங்கிற் பந்தம்போம் விவேகத் தாலே
யுற்றறி வுண்மை சேரி லுளத்தில்வா தனைபோம் போனா
லற்றமில் சித்த நெய்தீர் தீபம்போ லாகு மன்றே. 25

### 4—3. வீம பாச திடர் கதை முற்றிற்று.

ஆக விருத்தம்—631.

# 4—4. தாசூரன் கதை.



ஒழியாத துயர்மாயை யெனுமா பத்தை யொழிக்கமந நாசமோ ருபாய மாநு, மிழியாத மெய்ஞ்ஞானப் பொருளை யெல்லா மியம்பக் கேட் டயராம லிதயங் கொள்வாய், பழியான போகத்தி னிச்சை தானே பாதமா மதுவிடலே பரம மாகும், வழியான பன்னூலாற் பயன்கொ ளென்ன வுருந்தாம லிவ்வழியே வருதல் வேண்டும். 1

இன்பமிதா மின்பமிதா மென்ற வெல்லா மெரியெனநஞ் செனநினைக வேற்றத் தாழ்வாய்த், துன்புறுபோ கம்பலகாற் றேர்ந்து நெஞ்சிற் றேயாம லெளிதருந்திற் சுகமே யாகும், வன்பு பயின் மநத்தோற்ற நாச மாகு மநத்தினது நாசமே மகத்தாந் தோற்றம், நன்பரம ஞானிகணெஞ் சிறந்து போகு நடைவிலங்கா மறிவிலர்க்கு நவைகூர் நெஞ்சம். 2

ஆநந்த நிராநந்த மிரண்டு மில்லை யசைவுமசை வின்மையுமா மவையு மில்லை, யீநந்தீர் சத்தசத்தன் றிவற்றுக் கெல்லா மிடை யல்ல ஞானிமந மென்ற லோடுந், தானந்த மிலாவறிவா யுலகின் மேலாந் தத்துவத்தி னுலகிருக்குந் தன்மை தன்னை, ஞானந்தான் வளர்பொருட்டா யுரைப்பா யென்று நாதனியம் பிடவசிட்ட னவில்வ தானன். 3

வேறிலா தெவனிடத்து மேவி நின்று மேவாம லுண்மையினால் வேரும் விண்போற், கூறிலாச் சிற்பாவ மெங்கு நின்றுங் கூறுபடு மவற்றொன்றுங் கூடிப் பற்றுப், பேறிலாச் சங்கற்ப மனைத்து மின்றிப் பேரின்றி யழிவின்றிப் பேத மின்றி, யூறிலா வாகாயங் கோடி கூறு வுரித்தவற்றி லொருகூற்றை யொப்ப தொய்தாம். 4

நன்றிதரு முண்மைமுதற் பெயர்கள் பெற்று ஞானகளபா னிமலமா ஞான மாகி, யொன்றுமல வுருவான குடும்ப (நப மொன்

ரூகித் தனைத்தெரிவித் துணர்வே மெய்யாய்த், தன்றுணைச்சிந் மாத்திரைதுக் கயலற் றிந்தத் தொகசாமத் தாமயமாஞ் சகங்களெல் லாந், துன்றுதிரை முதலாகப் பிறந்த வெல்லாஞ் சூழ்கடலில் வேறு காத் தொடர்ச்சி போலாம். 5

துனைதருபல் பிறப்பாகிக் கொடுதாய்ப் பொல்லாச் சுபாவமாந் தனையறியாச் சடமாய்ச் சென்றுந், தடைபடுஞ்செந்தார்க் கொளியுருவா யெல்லா மொன்றாய்த் தானுவ மூடபேசித் தன்மை யாலே, பினை வொரெடுசெய் கொன்செய்கை செடலிச் மூன்று நிகழ்விக்கும் பாவித்த நினைவுக் கெல்லா, மினை பகவை யாய்நிற்கும் பிறவிப் போக மருந்துவோரக் கப்போக மாகி நிற்கும். 6

அத்தமாக முதயமில்லை யெடுத விற்ற லயல்போதல் வருத லெனு மனைத்து மில்லை, யிதந்தலைத்தி லில்லையிலா திருக்க வில்லை யித்திறமாஞ் சித்துமல மில்லா மெய்யாய்ச், சுத்தமுறு தானேதன் னிடத்தி னிற்குஞ் சொன்னநெறி யேசகமாய்ச் சொல்லே ராலே, மெத்தவெகு ரூபமாந் தற்சுபாவம் விரிக்கெத்குஞ் சிற்பெயரால் விளங்கி நிற்கும். 7

இன்னசுபா வந்தானே யொளியாய் நிற்கு மிருளாகு மொன்றாகு மீறில் கூறாந், தன்னுடைய தொழிலாலே தானே பூர்ண தத்துவம் விட் டிவனவனு மென்னுந் தன்மை, யுன்னியபா வனையாலே மெள்ளச் சீவ னுருவாகிக் குடும்பியெனு மூகத் தாலே, பன்னியநா னாத்துவத்தி லழுந்திப் பாவா பாவம்பற் றுதல்விடலாம் பதத்தி னிற்கும். 8

அப்பதத்தி னின்றபுரி யட்ட கத்தை யனவிலசை உால மைக்கு மமைத்தி டாதா, மிப்பரிசி னின்றுரவே வடிவ மான வெழுபிறவி வகைமாலை யியற்று மெங்கு, மொப்பரிய தற்பிரம சுபாவத் தாலே யுரைத்தெலா மெழுமீண்டு மொடுங்கிப் போகு,

மெய்ப்பட்டா மிக்காச விண்ணிற் கனல் விரிவதுபோற் சிதினி லைவ விரிந்து தோன்றும். 9

படர்மதத்தார் நினைப்பிறர்போற் றேன்று மாபோற் பகுத்த விலா வுந்நசசித்ர பாசுக்கானே, படர்பொய்போற் றேன்றியதாற் சத்த மாதி யடங்கலு மேதோன்ற லறியா னின்றாய், தொடர் கின்ற வனுவித்த வார்வ மாகுந் தோற்றமெலாந் தாஞகித் துன்னி நின்ற, விடமுடைய பரப்பிரம மிதுவே யீதிங் கிருப்பதுவும் பெயர்வவமா மிதனா லென்றில்லை. 10

பொருகடலிற் றிரைமுதலாப் பிறந்த வெல்லாம் புனலாகி விளககாமற் புழுதி யாமோ, வொருபொருளாம் பிரமமாத் திரமே யல்லா லுபயமெனுங் கற்பனைப்பே ரொன்று மில்லை, யெரியிடத் திற் சூடுமாத் திரமே யல்லா லிரண்டுண்டோ வவ்வகைபோ லென்று மொன்றுஞ், சரியைகிரி யாயோகப் பதத்தின் முற்றிச் சாதநக்க ணிறைந்தவர்க்கே சாற்றல் வேண்டும். 11

இயற்கைகுணஞ் சோதித்து முன்னே பின்னே யாவையுமாம் பிரமநீ யென்னல் வேண்டும், வியப்புறவா சையிலுழல்வார்க் கிவ்வா றேதின் மீளாத நிரகில் வீழ்தத தாகுந், தியக்குறுபோ கத்தாசை தீர்ந்து புந்தி தெளிந்தமகத் தாவார்க்கே திகழத் தோன்றும், மயக்கமற வுணர்த்தவல்ல குருவைக் கிட்டா வருந்தியுந்தன் பிறப் பறுக்கு மகனு மாங்கே. 12

விளக்குமிர விபுமலரு முண்டா யுண்டாம் வீசொளியும் பகற் பொழுதும் விரையும் போலத, துளக்கமில்சித துண்டாகி லுண்டா ஞாலந் தோற்றரவு மாத்திரமே சொரூப மாகுந, கிளத்தபர மார்த் தத்தா லில்லை யென்னக் கேட்டலுமே பாற்கடல்போற் கெம்பீ ரத்தா, வளக்கரிதாய்ச் சீதளமா யமல மாகி யற்புதமா னின்மொழி யென் றண்ணல் சொல்வான். 13

இம்மொழிக ளாலிமைப்போ திருளா மீன விமைப்போதோ
வொளியாகு மிவ்வா றாகி, மைம்முகிலா லர்மாய் வெய்யிற் சிதம்
வந்துவந்து போகின்ற மழைநா ளொத்தேன், மெய்ம்முநியே யநந்த
மாய்ப் பலவா யொன்றாய் விபாதா யளக்கரிதாய் விளக்க மெய்திச்,
செம்முறையா மாத்துமதத் ஜடத்துக் கிந்தச் செய்தொழில்கள்
வந்தவா செப்பு கென்றான். 14

மெய்யான பொருளுடைய வாக்கி யத்தின் மெய்ப்பொருளாய்
முன்னொடுபின் விரோத மின்றிக், கையாரு நெல்லியெனக் காட்ட
வல்ல கட்டுரையே யாமிதற்கு கழறிற் றெல்லா, மெய்யான ஞானவிழி
வெளியாய்ப் போதம் விரியவதித் தாலென்சொன் மன்னும்
விதைதக், கையார வலிதெளிதென் றுள்ள வாறு கலக்கமற
நிலைநின்று காண்டி யன்றே. 15

தன்னுருவ மாய்வதற்கே முயல்வ தாயுத் தமமான வவித்
தையினாற் சகல மான, வின்னலுறு குற்றமிலா வித்தை யெய்து
மெய்கணைகள் கணையாலே நஞ்சை நஞ்சாற், றன்னுபகை பகை
யாலே தீது தீதாற் றடைப்பதுபோ லவித்தைதனைத் துடைத்தல்
வேண்டு, முன்னியுறப் பார்த்தலுமே யிதன்சு பாவ மொழிந்து
போய்த் தன்மாய்வா லுதவு மின்பம். 16

நனிமெய்யாய் மாயையில தென்றிவ் வாறு நாடுவாய் ஞாநியாய்
ஞேயம் பெற்றாற், றுணிசெயுமீ துளமாயை யறிதி யன்றே துகளிலா
நற்போதந் தோன்று மட்டும், பனிமாயை யில்லையென வென்
சொல் லாலே பழுதில்லா வுறுதியுறப் பற்றி நிற்பாய், புநிதமுறு
பிரமமே யெல்லா மென்று புந்தியிற்கண் டோர்முத்தி பொருந்தி
னோரே. 17

பேதமுறு புந்தியே மாயை யாகும் பெரிதுவருந் தியுமிதனைப்
போக்கல் வேண்டும், போதமுறு பேற்றினா லன்றி மாயைப் பொரு
நதியின் கரைதோன்றாப் பொருந்தத் தோன்றி, வேதமறு

மப்பதமே யிரவா வீடா மம்மாயை பிறப்பிடமே தென்ன வேண் டாஞ், சேதமுறக் கொல்பழியே தென்ற தேர்வாய் சிதைவுற்று விதனியல்பு தெரியு மன்றே. 18

யாதினின்றோன் றியதென்றும் யாதீ தென்று மிரந்தநெறி யாதென்று மிறந்தாற் றோன்ற, மாதவினால் வன்றுயரின் சாலை யான வவித்தைதெனு நோக்குமருந் தருந்தச் செய்தாற், றீது பயில் பிறப்பென்னு கடலின் மூழ்காச் செறிகாற்றத் தன்னுரு வாற் சேனை றன்னுற், சாதமுறச் திரிவதுபோற் றன்பாற் றோன் றாற் சத்தியினு லாத்துமதத் துவகின் றெல்கும். 19

நோய்யநெடுஞ் சிற்கடறன் னிடத்தே யற்ப நுடக்கத்தாற் கணம்விளக்கு நண்மை நோக்கா, லையமறத் தற்பதமொன் றகண்ட மென்றே யழுந்துவா யக்கடலி லசைந்து சற்றே, மொய் யறிவாஞ் சிற்சத்தி கணகா லத்தின் முழுதுறுசத் தியினுலு முழங் கத் தோன்றித், துய்யவிடங் காலமொடு தொழில்கண் மூன்று தூயனசத் திகடம்மைத் துணையாய்ச் சேர்க்கும். 20

தனதுசுபா வத்தையறிந் தநந்த மான தற்பதத்தி லிருந்துஞ் சிற் சத்தி தானே, யெனதுருவிவ் வளவென்றே யறிவற் றுற்போ லெண்ணுறுமிப் படியுருவை யிதுபா விக்கி, லநுகதமா யப்பொழுதே பெயர்க ளெண்ணே யாதியாம் பார்வைகள்வந் தடையா நிற்கு, நவிகற்பந் தருவடிவாய்ச் சித்து ரூபங் கவரிடங்கா லந்தொழிற் குக் கலந்த பற்றும். 21

ஈங்குரைசெய் சித்தினுடை யுருவந் தன்னை யாவருஞ்சேத் திரக்கியனென் றியம்பா நிற்ப, ராங்கதுவும் வாதனையைச் செய்யா நின்றே யகங்கார பாவனையை யடையா நிற்கும், வாங்கருமாங் காரமுனிச் சயிப்ப தாகி மலிநமுறு புந்தியா மலஞ்சேர் புந்தி, வீஙகிய கற் பனைவடிவாய் மநந நெஞ்சாம் விகற்பமிகு மநம்பொறியா மெல்ல வந்தே. 22

கரசரண மயவுடலம் பொறிக ளென்பர் கவல்வுறவிப் படியன்
றே கலந்து சீவன், விரவியசங் கற்பமெனும் பாசத் தாலே வீக்
குண்டு துன்பவலை வீசப் பட்டுத், தாமரவீ னதையடைவே
யடையா நிற்குஞ் சத்திமய மாமாமித் தன்மை யாகிப், பொரா
வகங்கா ரதைமேவிக் கோச காரப் புழுப்போற்றன் னிச்சையினாற்
பூணும் பந்தம். 23

தானேசங் கற்பித்துத் தன்மாத் திரத்தாற் றனிவலையா முட்
டொழில்க டன்னைக் கட்டக், காமொன்று சிங்கம்விலங் குற்ற தென்
னக் கவலையினான் மிகவுமரங் கரைந்து சோரு, மானுத மாம்புந்தி
ஞானஞ் செய்கை யகங்கரம்வா தனையுடலம் பகுதி மாயை, யூனுண
மலங்கருமம் பந்தஞ் சித்த மோதவித்தை யிச்சையென வுரைப்ப
ரன்றே. 24

அப்பரிசோ ரோரிடத்தி லோரோன் றுக வாசாபா சத்தினு
லமைத்துச் சொன்ன, வொப்பரிய சகவிரிவா மிவற்றை யெல்லா
முட்கொள்ளும் பலமிதனி லொன்று மில்லை, கப்புடைய நெடு
வடத்தை வடத்தின் வித்தக் கரந்திருப்ப தொக்குமிடர்க் கவலைத
தீயின், வெப்பமிகக் கோபப்பாம் பெடுத்து நக்க வேட்கையெனு ங
கடற்றிரையான் மெலியு முள்ளம். 25

பெருகியவித் துயர்களா லவச மாய்த்தன் பிதாமகனை மறந்து
மிகப் பீடை யுற்றுக், கருகியவிம் மாந்தன்னை யளற்றி லானைக்
கரையேற்றி விடுவதுபோற் கரையி லேற்றாய், வெருவுசரா மரண
மெனும் விடத்தால் வெந்து மிகுநலந்தீங் கெனும்பகையான் மெலியு
நெஞ்சக், கருள்புரியா நரர்மனித வடிவ மான வரக்கரே யருள்வடிவ
மான வள்ளால். 26

இவ்வகையே சிற்பாவ சீவ பேத மியல்வடிவாம் பிரமத்தி
னிடையே நின்று, வவ்வியபா வனையாலே வந்த கோடி வாராகின்
றனகோடி வருவ கோடி, தெய்வவரை யருவிநீர்த் துளிபோல்

வந்தோர் சிலர்பிரவி யொன்றிரண்டு மூன்று சேர்ந்தோர், நைவரு செர் மக்கள்சிலர் நூற்றின் மிக்கோர் நாடரிய பலருஞ்சிலர்க ணண்ணி நின்றோர். 27

சிலர்சிலர்கள் கின்னரர்கந் திருவ ரானோர் சிலர்விச்சா தரரு கர் திரளாய் நின்றோர், சிலரரக்க ரிமகிரணன் வருண னானோர் சிலர்பிரமன் றிருநெடுமால் சிவனாய் நின்றோர், சிலர்மறையோர் சிலரரச ராகி நின்றோர் சிலர்வணிகர் வேளாண்மைச் செயலி னின்றோர், சிலர்விலங்கு பறவைகளூர் வனவாய் வந்தோர் சிலரிலை காய் பழமூலத் திரண மானோர். 28

சிலர்மயேந் திரசைலஞ் சைய மேரு தென்மலய மந்தரமாய்ச் சிறந்து நின்றோர், சிலர்கடம்பஞ் செம்பீரந் தாலஞ் சாலஞ் சிறந்த தமா லங்களாய்ச் செறிந்து நின்றோர், சிலருவரி தயிர்நெய்பாற் கருப்பஞ் சாறு தேனெடுநீர் பெருங்கடலாய்ச் சேர்ந்து நின்றோர், சிலர்திசைகள் சிலர்நதிக ளாகி நின்றோர் சிலர்மேலோர் சிலர்கீழோர் சிவ ரானோர். 29

கையினா லடையுண்ணும் பந்து போலக் காலனா லறையுண்டு கணக்கி லாத, மெய்யிலே புகுந்தலுத்து விவேகம் பெற்றும் விரகி லார் சிலர்பிறப்பின் மீண்டும் வீழ்ந்தார், மையினான் மூன்றுலகாம் பணதி செய்து வருநிற்கும் போமாகி வளர்ந்து வாளாப், பொய் யினான் மிகவிரியும் வேலை யூடே பொருதிரைபோற் பரபதத்தே புரிந்த மாயை. 30

தெரிந்துணர்ந்தோ ரியவாறு செப்ப லோடுஞ் சீவன்றன் மாபதத்தைச் சேர்ந்து நின்றும், விரிஞ்சனெனும் பெயர்பெற்ற தேவனா றென்று வித்தாரத்தா லுள்ளபடி விளம்பு கென்ன, வரிந்த மன்கேட் டலும்வசிட்ட னுரைப்பான் வள்ளா லந்தநெறி கேட் டலுமே யகில ஞாலம், புரிந்தநெறி யறிதியிதன் றன்மை யெல்லாம் புந்தியுறக் கேட்டுணர்வு பொருந்து வாயே. 31

வேறு.

திசைகால மாதிகளாற் றன்னுடைய சந்நிதியினூ டிரியாச் சிவன்
பசையான லீலையினாற் றிசைகால மாதிகளாற் டமின்ற மேனி
யிசையாகின் றுளபோதே சிவனுக்குப் பரியாய மென்னப் பட்ட
வசையான வாதனையின் வசத்தாலே யுலையுமாம் வந்து தோன்றும்.

செயல்செயலின் மைகளிரண்டுஞ் சேர்ந்தெழுந்த மாச்சத்தி செயலை மேவி, யியல்பின்முத லெட்டாகிச் சுத்தவித்தை யிரதத்தி லெழுவ தான, வுயர்தருவின் பாவனையைப் பாவிக்குங் கலை யுடனே யந்த, வியனலைவின் றன்னெறியா லெட்டமாங் காதையினை மேவு மன்றே. 33

பரிசவித்தை யிரதத்தி லெழுவதாட் கர்ந்தசைவைப் பாவித் துன்னும், விரிதருவின் காற்றிரண்டின் மெய்ந்நகக்கி லேகின்றும் வெந்தீத் தோன்றி, யிருதிறசசத் தப்பரிசந் நிடமாகப் பழக்கமுறு மியல்பி னாலே, யுருவதன்மாத் திரைமேவு மிம்மன்றி னுடன்மேவு முள்ளந் தானே. 34

கணத்திலிர தத்தியல்பைப் பாவிக்க நீரதிவக் கருத்தி னுண் டாகு, குணத்தினையத் திறங்களொடுங் கூடுமங்கு கணத்திலே குறித்து நாடி, மனதினைப்பா வித்தலுந்தன் மாத்திரத்தாற் பாரறிவு வருமிவ் வாறே, தணத்தபூ தத்தன்மாத் திரம்வளைத்து வளைத்துருவாய்ச் சகமாய்த் தோன்றும். 35

திகழ்ந்தவனற் பொறியென்னத் திகழ்வடிவை விண்ணிலே தெரியக் காணு, மகங்காரமாந் தொழின்மேவிப் புந்தியுடன் வித்தை யோடு மணுகி யந்தப், புகன்றதெலாஞ் சேர்ந்துபுரி யட்டகமா யுயிர்களுளப் பூவில் வண்டா, யிருந்தகடுங் கூட்டரவாற் பாவிக்கு மிகவிளங்கு மேனி தன்னை. 36

பாவனையற் றிடத்துல மேனியாய் வில்வத்தின் பழம்போற் சித்த, மேகரு விற்பாய்ந்த பொன்னிறம்போன் மிகவிளங்கி விமல விண்ணாகி, நூவாமுண் டாகிற்கு மந்தவொளி தன்னுடைய சுபாவத் தன்னாற், கேவலமேற் றலைகீழ்காற் பக்கங்கை நடுவயிருக் கிளர்ந்தோ ருரும். 37

முந்தியகா லத்தினில் வெளியாகி நின்மலமா மூர்த்தி யாகிப்
புந்தியொடு சத்துவமொய்ம் புச்சாகம் விஞ்ஞானம் பொறியு மேவு
மந்தவுவ னேபகல பிதாமகனுப் முழுதுணர்ந்த வயனு மன்னான்
சுந்தரமா யுத்தமமாய்த் திகழ்கின்ற தன்வடிவைத் தோன்ற நோக்கி.

குன்றாத வறுகுணத்தோன் மூன்றுகா லமும்வெளியாக் குறிக்கும் வேதா, வொன்றாகிச் சிற்பயமே யுருவமாய்க் கரைகாணு வயர்வா நத்தின், மூன்றுறுண் டாகியதென் னெனநினைந்தா னழுக்கிலா முழுஞா னக்கண், ணான்றுவப் போதுதித்தோன் பல கோடி சிருட்டமுத னடத்தக் கண்டான். 39

சாதிகுலத் தருமமெலா முணர்ந்தவற்றை லீலையினாற் றன்கற் பித்தா
னேதரிய லீலையினாற் சங்கற்பத் தாற்பிறக்கு முயிரை யெல்லா
மேதமுறு கர்தர்ப்ப நகரம்போ லரம்பொருள்வீ டின்ப மெய்த
மேதகைய பலகோடி சாத்திரங்க ளவர்க்காக விதித்தான் வேதா.40

விரிஞ்சனுரு வாமரத்தா லிச்சிருட்டி யிற்சிருட்டி மேவி *நின்றும்
புரிந்தலரு மவரெல்லாம் வசந்தகா லத்தினாற் பூப்ப தொக்கும்
பிரிந்தசுரர் நார்முதலோர் தத்தஞ்சங் கற்பத்தாற் பிறவி யுற்றார்
தெரிந்தவைய சங்கற்ப மறிற்பிறவார் நெய்மாண்ட தீபம் போல. 41

வாநகிக் ராமனைத்துங் கற்பனைமாத் திரம்வாளா வளரா நிற்கு; மானசக நவுதனிற் கனவுபோ லிராகவனே யறிதி யன்றே, பன்முறைப் பிறப்பில்லை யிறப்பில்லை யெனவிடத்து

* நின்ற எனவும் பாடம்.

மொன்று மென்றும், ஞானபா மார்த்தத்தா லிவையெல்லாம் பொய் யாக நண்ணு மன்றே. 42

வெங்காதற் பெரும்பாம்பு நெளிபுற்றுக் குடும்பபாரம் வெறும் பொய் யென்றே, யிக்காசை யகநீக்கி யெல்லையிலாப் பரமபதத் திருந்து வாழ்வாய், சிங்காரச் சந்தர்ப்ப நகரிருந்தே தன் சிதைவுற் றென் றீதோ நன்றோ, மங்காத மனைமக்கள் வாழ்ந்தாலென் கெட் டாலென் பாச மாயை. 43

தாரதர மிகுமென்னிற் றொலையாகு மப்பாசந் தளைத்துக் கொண்டா, லாரதனை யறுத்தகலும் விரகுடையா ரறிவில்லா ராசை விஞ்சிக், கூரிதையா மப்போகத் தழுன்றழுக்குங் கொடுந்துயரைக் குறித்த போதே, நீரதையா மறிஞர்க்கு விரத்தியுள தாய்ச்சித்தந் தெளியு மன்றே. 44

ஆனதிறத் தாற்குடும்ப பாரவியா பாரத்தி லுழலும் போது, போனபொருட் கிரங்காமற் பொருந்துபொருண் மாத்திரமே புசித்து வாழ்வாய், தினமுற வருபொருளைச் சிந்தியார் வந்த பொருட் டெதென் றெண்ணார், ஞானபர ரானோர்க்குஞ் சுபாவமாங் குணமிதுவே நளினக் கண்ணாய். 45

கண்டனவெல் லாம்பொய்யென் றுள்ளத்தி லனைத்தினும் வெங் காத னீத்த, பண்டிதரா முழுதுணர்ந்த பெரியோரை யீராது பாச மாயை, யுண்டிலையென் பாற்றிடையின் சுத்தமாம் பதம்புந்தி யூன்றப் பற்றி, விண்டவுடற் கட்புறம்பா முலகைநீ பற்றுதலும் விடலும் வேண்டா. 46

எக்கருமத் திலுமிச்சை யநிச்சையற நின்றுணர்வை யெய்தி னோர்க்கே, யக்கருமங் களிலறிவு பற்றாதா மரையிலைசே ரம்பு போலத், தொக்கபொறி விடயநலஞ் சுவையறநின் மனமாரத் தோன் றில் வீரா, தக்கவுணர் வுணர்ந்தோனாய்ப் பவக்கடல்கள் கடந் தன்றே சநநந் தீர்ந்தாய். 47

உச்சமுறு ம[illegible]ண்ட வினைத்துயர தலையிலுமின் னுள்ளத் தன்னை, நிச்சயமா முணர்ந்திடவே நிக்குடைப்ப மலரின்மண நீக்கு மாபோற், [illegible] மனமதனாற் றானகற்றி மக்கடலிற் றுளை வார்க்கெல்லா, [illegible] கலமாகக் கரைசேர்த்து மய வொன் றன்றே. 48

பாபாநகன் [illegible]த்தும் பன்மைசவை ருலகயலபு பராரா நீக்கார், [illegible] நகமுரத்தும் [illegible] ருரியத்துத் துயர மெய் தார், விரா[illegible] வெட்டவன்போ லதுசரிப்பர் மேன் மை சான்றோர், [illegible] நடத்திடுவென வசிட்டமுனி யிட்ட தெனாம். 49

பரத்துடகே [illegible]வகாநு பரமமுனி பரமபதம் பகரக் கேட்டுத், திரத்துடமா நிறைசெர்தான்போற் சிராம னமலமாய்த் திர்ந்து சித்தந், தரத்துவமை யில்லாத மெய்ஞ்ஞான நல்லமுதாம் றதும்பித் தண் ணென், றரத்தூளர் சந்திரன்போ னிறைவுற்றான் வசிட்டனு மீண் டுரைப்ப தானான். 50

ஒருகால மரர்படைப்ப னொருகால மயன்படைப்ப னுலக மெல்லா, மொருகால மரிபடைப்ப னொருகால முனிவர்படைப் புள்ள தாகு, மொருகாலம் புயத்துதிப்ப னொருகால்வா ரியினுதிப்ப னுயர்ந்த வேதா, வொருகாலண் டத்துதிப்ப னொருகால்விண் ணகத்திலே யுதிப்ப னன்றே. 51

வன்மரக்க ளொனெருக்கு மொருபடைப்பி லொருபடைப்பின் மனிதா துன்னும், பன்மலைக ளொனெருக்கு மொருபடைப்பி லொரு படைப்பிற் படர்மண்ணே நெருக், கன்மயமா மொருபடைப்பி லொரு படைப்பிற் றசைமயமாக் காண லாகும், பொன்மயமா மொரு படைப்பி லிப்படியே பலவிதமாம் பூமி தானே. 52

வான்முதலா மண்முதலா நீர்முதலாத் தீமுதலா மற்றை வாயுத், தான்முதலா மிப்படியே சிருட்டிதொறு மோரொன்று

தலைமை யாகும், யான்முதலோ ரயன்சிருட்டி தரிசநமா வனக் குரைத்தே னிந்த வாரமுன், மேன்முதலா கியமமிதற் கொன்றாக விலதுபல விதமாய்த் தோன்றும். 53

கிருதயுத லுகமாது நீண்டமீண் டுற்பவிக்குங் கிளத்து முலகத், தொருபொருளுங் கலைத்துடைத்த் தசந்தமடங் குற்பவமா யதுவே தில்லை, பிறர்பெருந் மாமாயை யுன்னனைக்கு முன்னிலை யாமையைக் கொத, வருமமரதேர் தாசூரன் கதைகேட்ட யிராம னென வகையுட தாரேன். 54

வேறு.

நீர்தப் புகரத் தூடே யெழிலார் மலரின் பொழில்வாய்
மந்தக் குளிர்கால் கமழு மகத தேசந் தன்னிற்
கந்தக் கதலி கடம்ப கன்னி காரஞ் செறிந்து
சிந்தைக் கினிதா கியதோர் சிறப்பா மலையி னிடத்தே. 55

பரலோ கஞ்சேர் தவமே பண்ணி யயன்போ லுயர்ந்த
சரலோ மாவின் மைந்தன் ருசு ரப்பெயர் முனிவன்
சுரலோ கத்தின் குருவின் றோன்றற் கசனை யொப்பா
னரலோ கத்தின் மேலா னைந்திர் தவத்தாற் பெரியோன். 56

தனைய னொருவ னேடுஞ் சரலோ மாவா முனிவ
னனைய கிரியின் வாத்தி லநேக யுகஞ்சென் றதற்பின்
புனையுங் கூடு கழிந்து புட்போ வதுபோற் போகி
வினைசெய் யுடலை விட்டு விண்ணோர் வடிவை யெடுத்தான். 57

தனியே யந்த வாத்தே தாசூ ரப்பேர் முனிவ
னினிய தாதை யிறவுக் கிரங்கி யுதகத் தியற்றும்
புநித மான பிரம பூசை முழுதும் புரியான்
கனியு நெஞ்ச னன்றில் கதறு மாபோற் கதறி. 58

றருவிற் றலையிற் றளிர்மேற் றலர்தந் தருள்கா வென்ன
வரமுற் றதவிக் கனலோன் வாரித் திரைபோன் மறைந்தான். 65

காநத் திடையோர் கடப்பங் காரின் பதத்தைக் கடந்து
வாநத் துயர்ந்த தருமேல் வருபல் லவமென் றவிசின்
றூனத் தைய மின்றித் தாரு ரன்று னிருந்து
மேனற் றவமே செய்வான் மிகவும் விரும்பு மகத்தான். 66

வேறு.

ஒருகணந் திசைக வினைத்தையு நோக்கி யுறைத்தபத் மாதநத் திருந்தான், பெருகிய திசைகண் முழுதிலுந் திரும்பிப் பிரமடா வினையறி வரிதாக், கருமமாத் திரத்தி னிற்பதாய்ப் பலமாய கற்கசம் விரும்புறு மாத்தால், வருடமைந் திரண்டு மகங்களே நடத்தி வாகவர்க் கவியுண வளித்தான். 67

கோத்திரன் டாவி மனிதரா லியற்றுங் கோதறு வேள்விகள முற்றுஞ், சாத்திர விதியா லியற்றினீள் காலந் தவறற நடந்தமை யாலே, மாத்திர மான மநமிகத் தெளிந்து வரம்பில தாதலு மாங்கே, நேத்திர மான ஞானமுந் தெய்தி நிறைந்தனன் வலிந்தி னன் னெஞ்சம். 68

பிறவியா வாரணங் கழிந்தவா தனைகள் பேரற மாண்டுள பெரியோ, னிறவிய தளிர்மே லிருத்தலு மொருநா ணிமலமாம் விழிகளுக் கெதிரே, யுறவிரி மலரின் மேகலை யுடுத்த வுயர்வன தேவதை தோன்ற, வறிவனு நோக்கி யார்கொனீ யென்ன வழகிய வணங்குரை செய்வாள். 69

பெரியவர் தம்பாற் பெறலரு நேயம் பெற்றவர் விரும்பிய வெல்லா, மரியன வெனினு மிமைப்பினி லெளிதி லணுகுமென் றய்யமற் றறிந்தேன், றெரிவருண் முநிவ நீயுறை வநத்திற் செறிவன தேவதை யிங்ஙன், விரியலர் கொடியாம் விநோதவீட் டிடையே விருப்பொடு மிருப்பவ ளேனே. 70

சேடமா தத்தின் பிறைப்பதில் முன்று கலையற மெலிய நாளி, லொடரு மதன னுடைந்திரு நாளி னார்த்தன டாத்திலெ வந்து, கூடிய வாதெ மனைக்கணர் தன்னைக் குடிகினென் பாதகியர் முழுதுந், தேடரு வமர்த்த ருடன்மகிழ்ந் திருந்தார் சிறுவனில் லாதயான் றளர்ந்தேன். 71

காதலித் தடர்க்குக் கருதிட தளிக்குங் கற்பக மனையர் யிருப்ப, காதமென காத ரில்லைர் போல நான்மகப் பிராத்துத னல மொ, ரீதால் வென்றிம் பதம்மனெ பற்றி நன்னரு மென்பொருட் டிவதேர், நீதற மதிலை யிவெதெனுந் துன்பஞ் செந்தழன் மூழ்கியே திர்ப்பேன். 72

என்னனு முர்ப னைகத்தொரு மகவை யீந்தொரு மதியிலே வெளிதா, மன்னமே மகவைப் பெறுதியா னீமுன் னருங்கனன் மூழ்குமே னென்று, லின்னலால் வலித்து மகவுவேண் டுதலா லினிதுநீ யின்றிடு மகவம், பின்றுறு வருந்த நெறியினுன் ஞானம் பெறுமெனப் பேசினன் பெரியோன். 73

கேட்டவன் மகவு கிடைத்ததே யென்று கிளர்முக மதிநிலாக் குலாவ, மீட்டுமம் முனியை நோக்கிநின் னேவல் விரும்பியீண் டுறைகுவ னென்ன, வாட்டமின் முனிவ னியைந்திலன் விடுப்ப வந்தன னணைகுதன் னிடத்திற், சேட்டமா மகவை யளித்தனள் கலையாற் செறிதரு மதியென வளர்த்தாள். 74

இருதுவே யாண்டே யெனுங்குறி களிறு விறந்தன வாறிரண் டாண்டு, திருமுனி பாத மகவொடு மடைந்து சென்னிதாழ்ந் தெதி ருற நின்று, பெருமைகண் டருள்வாய் சீதர யானே பெற்றவிப் பெருங்குணக் குமர, னருமறை நூல்க ளனைத்தையு நானே யளித் திட வறிவினு லறிந்தான். 75

கலையெலா நிறைந்தும் பிறப்பிலா ஞானங் கண்டிலன் கடற் படித் துயரா, லலைவுறு நின்றுன் றனையுணர் ஞான மளித்தியென்

நணங்குறை செய்ய, நிலைகொண்மா ணுக்க னமக்கிவ ணுக்கி நீயகல் கெனகவ ளகன்று, டலைமைசேர் முநிவன் றுளிணை விடாது சற்குண மதலையு சின்றான். 76

கருத்திமெய்ஞ் ஞானம் பெறத்தகு மகவை மாதவ னருளினன் மெல்லத், திருத்திய கதைக ளளவைக ளிதிகா சத்திலே செப்பிய திறங்கள், பெருத்துணை மறையின் முடிவிலே துணிந்து பேசிய பழம்பொருண் மற்றும், பொருந்திய நெறிக ளநேகமாய் விரித்துப் பூரண போதமே பகன்றான். 77

வானதி ஞழ்க வதுநெறி யாக வாணிலே மறைந்துபோ யொருநா, ளானவேழ் முநிவர் பதவியின் றணுகி யனையதா சூரன் வாழ் கடமயின், றூனமே மேவி யிருட்பொழு திருந்து தாபதன் றயனுக் குரைத்த, ஞானநற் பொருள்கள் கேட்டன மதனை நாமுனக் குள்ளவா றுரைப்பாம். 78

பிறப்பிலாப் பிரம மிதுவென வறுதி பிறப்பதோர் கதையிது கேளாய், சிறப்பதோ ரரசன் வீரமும் புகழுஞ் சிறந்தவன் றெளிஞ் ஞம் பெயரோ, னிறப்புறு மூலக பாலரா யுள்ளா ரவனுடை யேவலை முடிமே, னிறப்புறு மணிபோற் றுங்குவ ரெவர்க்கு நிலை பெற நிறுத்தொரு நெடியோன். 79

சாகச மொன்றும் விரும்புவோன் பலவாச் சாலவும் வியப்புறு தொழிலோன், சோகமு மகிழ்வுந் தருவதாய் முயலுந் தொழில் களின் றொருகுதியை யெண்ணின், மாகட லலைக ளெண்ணினுந் தொலையா வாட்படை வாயுவந் நிகளி, லேகமு மிவனை யடர்வுறு தாகு மிருகையால் விண்ணையென் செயலாம். 80

வரம்பற விரிந்து லீலையாற் புரியு மட்டறு முயற்சிக ளனைத் தந், திரம்பெறு தேவர் மூவரா லெனினுஞ் சிறிதுபிற் செல்லவு மரிதாம், பரம்பிய விவனுக் குடலமா யெல்லாம் பரிப்பவர் மூவருண்

டனைய, குரம்பையி னலகை யடர்ந்துறீஇப் பவர்க ளுத்தமன் மத்திம
னதமன். 81

முடிவிலா விசும்பிற் றொன்றிடுந் துறைபோன் மூடகை
புடலுடை முதல்வ, வினையவட் விசும்பி லவன்றரு நகர நீண்டவீ
திகள்பதி னுலா, மொழிவுற பகுதி மூன்றினு லெழிலா ருபவநம்
வநங்கள்செய் குன்றங், கொடிகள் முத்த மாலையேழ் வாவி குளிர்
கோதிப் பனவிரு தீபம். 82

என்பன நிறைந்த விசக ரத்தி லவன்றரு மபவா
கண், முன்புறு நிம்மே ளடுவேனும் டதங்கண் முழுதினு முழல்வுற
வீதித்த, வன்புறு தூண்கண் மூன்றுள வெலுப்பு மரங்களாற்
செறிந்தன பன்னீர், மென்படர் தோலா னெய்த்தினி தான
விரிமயிர்க் கற்றையான் மேய்ந்த. 83

மந்தமா ருதஞ்சூழ் சாலக மோன்பான் மருவின வைம்பொறி
யென்னுஞ், சந்தர விளக்கால் விளங்குவ விரண்டு தோளெனுந்
தோற்றமு முடைய, வுந்தமில் பரம பாவனைக் கஞ்சு மகங்கரப்
பேய்கள்காத் தளிப்பச், சந்தத மிலாத மாயையா லந்தத் தாணிபன்
சமைத்தடா வுறைகள். 84

அசைதரு மினிய பாவனைத் திரளி லகங்கரப் பேய்களோ
டுலாவிக், குசைதரு விநோதம் விவிதமா வியற்றிக் கூடுறை
புள்ளென வுறைந்து, விசையினு லவற்றை விட்டகன் றயலே மேல்
வரு பாவனை விதித்து, நசையுற மேவிப் பூதவா வேச நண்ணினர்
போலவ னடிக்கும். 85

இவற்றை ரவிட் டவற்றை யெய்துவ மென்றே யெண்ணுற
வப்படி யெய்து, மவற்றினின் றிறப்போ மென்றெணு நினைவா
லப்படி யிறந்துபோஞ் சித்தங், கவர்றியா லலையப் பிறந்திறந்
துழலுங் ககநமே யிவற்றினுக் கிடமாந், தவற்றினை யெய்தி
மீளவுந் தோன்றுந் தவழ்திரை நீரிலே வரல்போல். 86

மேனிபூன் றுடையோன் சிறந்தகந் தர்ப்ப விதித்தவா ரணைய தற்பரத்திற், றனினி திருந்து தொலைவற மேன்மேற் றழைப்புறு காரிய வசனு, ஏமமா மொருகா னன்மையா மொருகா லென் கேட்டோ மென்றிடு மொருகான், மானமா மொருகான் மயக்குறுந் தெளியு மருந்துறு மகிழ்வுறும் பல்கால். 87

தளர்ந்தன வென்னுந் தடித்தன வென்னுந் தாழ்ந்தன வுயர்ந்தன வென்னும், வளர்ந்தன வென்னுங் குறைந்தன வென்னு மாறுத மோதுமச் சடத்தோ, டுளர்ந்தரு லாத மன்னவன் சுழுத்தி துறைப்பதே தென்றுரு மைந்தன், கிளர்ந்ததா தையைநீ தெளிந்தவன் றுரைத்த சித்தியோ துரெனக் கேட்டான். 88

உண்மையா வுத்த மன்னனை யுரைத்தால் வரும்பிறப் பிறப் பெனும் பொய்யி, னுண்மைதன் குணர்தி யென்றுதா தைசொ னுத்தம மைந்தனுக் குரைப்பா, னொண்மைய மாகிப் பொய்யெனத் தோன்றி யிடமுற விரிமுயற் சியதாய்ச், சண்மய லான பிரவியி னிலையைக் கட்டுரை யாகமுன் னுரைத்தோம். 89

தற்பரா விசும்பி லுதித்தசங் கற்பஞ் சார்றிய மன்னன், பற்பல காலுந் தோன்றியு மறையும் பரப்பிய வுலகதன் வடிவா, மற்பசங் கற்ப முதாதெனி லுலகுண் டதுவில தெனிலுல கிலதா, முற்படு மூவர் முதலிய தேவர் மொய்த்தமெய் யுவமைய மதற்கே. 90

மேயதன் பத்திப் பாச்சன்மாத் திரத்தால் பாவனை மேவி, யாயசங் கற்பம் வடிவிலா விண்ணி லமைத்தது முப்புவி நகர, நாயக நீரோ டூரகிடு மீரேழ் ஞாலமே னகருறு தெருக்க, ளேனுநா லகங்கள் செறிபொழிற் றிரள்கள் சொல்லிய வுருமுப வனமே. 91

மேருமந் தரமே முதலவந் நகரின் மேவிய விநோதவெற் பினமாஞ், சூரியன் றிங்கள் காற்றினு லசையாச் சுடர்களா நித்தில

மாலை, நீருயர் நதியின் நீர்களாம் உவலி நிகழ்த்திய வெழுனு மவைதான், மேட்டல் உடைடை கடைவாட்ப் புத்த பெருக்கட லெழுமே மடர்மேடய். 92

இனைடமா நகராஞ் சகத்திடை முன்ன மியம்புசக் கற்பமன் னவனுரல், மினைமைுரல் மந்த வடல்கவ்பா வறையா மேற்பதத் தினையவ விரன்றும், மனைமடிற் பதத்தி ஞகமே யென்று மனி தமே நப்பதத் தென்றக், தினைதரு மாத வெத்திர விசையாற் சுழல்வன தனைச்சுவ ரகங்கள். 93

பல்வகை தாமே யியக்குறு முடலாம் பாவறை தோறுமவ் வேந்த, னல்வழு பணர்வை நோக்குற நந்து கலமிலா வகங்கர மென்றும், வல்லவிப் பேடகள் பொட்களா யிருந்தும் வந்துமெய் போலெழு மவர்கள், தொல்வதாம் விநோதம் புரிதருங் கணத்தி லுண்டோமா மில்லை மாதும். 94

காயமென் றுரைத்த பாவறை தோறுங் கடலிடை யலைகள் போற் றோன்றி, மாயுமே யியற்று மனைகளில் விடாமல் வருமிவ னியற்றிய வெல்லா, மேயதோர் கணத்தில் வீண்களாய் நசிக்கும் வீணிலே திரிதரு மென்ற, ஞயதன் சங்கற் பத்தினு லிருக்கு மவ்வன வருந்துய நழக்கும். 95

இறையுமோர் சுகமற் றிரக்குவோன் றனுண் டென்பதோர் பாவனை யாலே, நிறைசுக மியற்றுந் தானில தென்றே நினைத்திடி லக்கணத் திரக்தே, குறைவறு கதிர்முன் னிருளெனப் போகுங் குறித்தசிற் றின்பமற் றமிழு, முறைவறு மிவனுக் குடல்கண்மூன் றுளவா முத்தம மத்திம மதமம். 96

முக்குணந் தானே மூன்றுட லாகி மூலமா மூன்றுல கிற்கு, மக்குணந் தன்னிற் றமங்கொள்சங் கற்ப மாவது பகுதியின் செய லாற், றக்கமாய் வருந்திப் பாதலப் புழுவாந் தூயசத் துவங்கொள்

சங்கற்ப, மிக்காற் றரும ஞானம்வீ டுளதாய் வேந்தர்வேந் தென
மிக விளங்கும். 97

இராசத குணசங் கற்பமிவ் வுலகி லியல்புறு குடும்பியா
மியங்கும், விராவிய வித்த மூன்றையும் விட்டு மெய்ம்மையாய்த்
தானில தென்னி, னிராகுல மாக வனையசங் கற்ப நிமலமாம் பரபத
மடையுந். துராசையாம் பார்வை யனைத்தையு நீக்கித் துகண்மக
மாத்திற னிறத்தி. 98

உள்ளினும் புறத்து மெழுந்தசங் கற்ப மொருக்கிட வொருப்
பட ரிலைவா, யெள்ளருந் தவங்கள் கற்பகோ டிகணீ யியற்றினும்
பாதலம் பூமி, தன்னருந் துறக்க மேவினு முனக்குச் சாற்றுசங
கற்பமாய் வல்லாற், றெள்ளிய பரம பதத்தினை மேவத் தியக்கமி
லுபாயமவே றில்லை. 99

துயர்களும் விகாரங் களுமிலாப் பிரம சுகஞ்செய்சங் கற்பநா
சத்தை, முயலுதி நனிசங் கற்பமாங் கயிற்றின் முடிவுறு பாவனை
யெல்லா, மியல்புறு கோவை யாவெழு மந்தக் கயிற்றினை யெளி
தினி லறுத்தான், மயல்கொள்பா வனைக ளெங்ஙனே தாளாய்
மடியுமோ வறிகில மைந்தா. 100

துனிசெய்சங் கற்ப மின்றிமுன் வந்து தோன்றிய தொழில்
வழி நிற்பாய், பனிசெய்சங் கற்ப மாண்டிடி லறிவு பார்வைக
ளனைத்தினும் பற்றுத், தனியுயர் பிரம பதமடைந் தகில விகற்பமாந்
தனையெலாந் தள்ளி, யினியவ் வேகத் துவத்திலே சுழுத்தி யிதய
முற் றின்பமே பெறுவாய். 101

என்னலு முயர்சங் கற்பமே தென்ன வெழுந்ததும் வளர்ந்
தது மாய்ந்து, சன்னமா கியது மெங்ஙன மென்று தவஞ்செய்தா
சூரனை மைந்தன், பன்னியே கேட்ப வதற்கவ னுரைப்பான்

பரமமா யுண்மை யெனல் வேண்டாம், மின்னிட சமமா மறிவுகாண் பவற்
றின் மேவரு மெழுதல்சக் கற்பம். 102

அற்பமா யெழுந்து தானுள தாகி யடைவிலே பையப்பையப்
பருத்துத், தற்பர மாமாம் வெளியினை மூடிச் சடத்துவத் திடத்தி
னுண் டாக, வற்ப முகில்போல் வளர்வுறு மைந்தா வுணர்வகானை
பற்றினை யன்னி, நிற்பதாந் தனக்கு வேறுபோற் கண்டு நிகழ்த்து
சங் கற்பமாட் சிகழும். 103

அறிவெனும் விதைசங் கற்பமா முளையா மனையசங் கற்பமாந்
தன்னைப், பிறிவுறத் தானே செய்துதான் பிறக்கும் பெரிதுற
வளர்ந்திடுந் தானே, செறிதுய ரொழிய வின்பமொன் றில்லை யாத
லாற் செப்பசங் கற்ப, நெறிபுற நினைவே யின்புறு நிலையி னிமிட
மும் பாவனை நினையேல். 104

இவ்வள வான பாவனை யாலே யின்பமா மினையசங் கற்பந்,
தவ்வுறப் பெரிய முயற்சிகள் வேண்டாந் தாக்குபா வனையெலா
மொழித்த, வவ்வகை யாலே யிறந்துபோந் தன்னெஞ் சலர்வுறு
பூவினைக் கசக்கிற், கைவரு வருத்த மொன்றுள தாகுங் கழறிய
105

எழுந்தசங் கற்ப பாவனை விட்டா லிறந்துபோ மிதனையிந்
நிதனு, மெழுந்துற மாய்த்து மாத்திரன் மாத்தை யறுத்துநின்
னறிவினி னிற்பா, யுழுந்துருள் பொழுதின் முடியுமீ தரிதோ வுலக
மும் வானமு மொக்கு, முழுந்திய பொய்யாய்ப் போம்விகற் பத்தான்
முளைத்தவை யன்றிமுன் னிலதால். 106

தண்டுலத் தோலுஞ் செம்பினிற் களிம்புஞ் சம்பந்தந்
தொழில்விசே டத்தால், விண்டுபோ மதுபோற் புருடனு மலத்தை
மேவியே போக்குத லியலுங், கொண்டசந் தேக மொழித்துநீ
முயல்வாய் குருவின்வல் லபவிளக் கந்தாங், கண்டன மெனல்வீ
ணுருநீ தானுங் கண்டன பரம்பொருட் பொலிவே. 107

எனவவ னுரைத்த யாவையுங் கேட்டவ் விரவிலங் கவலைநா னெட்ட, மநமகிழ்ந் தருச்சித் தென்னொடைத் தளிர்மேல் வதிந்தன னிருவரு மெய்ம்மைக், கநகதை களினற் காதலுற் றவர்போற் கந்நிலைக் கணமெனக் கழித்தவ, வநகனை நீங்கிக் கங்கையுற் றனனெ னவன்கதை போலுமிச் சகமே. 108

**4—4. தாசூரன் கதை முற்றிற்று.**

ஆக விருத்தம்—739.

## 4—5. கசன் கதை.

முடிவுறு காலந் தன்னின் மொழிதரு மாண்டு நூறு
கோடியள வெனினும் பற்று திதனையே நெடிதாய் நோக்கி
யோடிவுறு பார வேட்கை யுறவதென் பொருள்க ளுன்னிப்
படர்வதா முள்ளத் தாசை பற்றற வொருக்கி நிற்பாய். 1

மாலற வெகுக னின்று யகநனே வாழ்வாய் பாரிற்
கோலநன் மணிகள் வேண்டா திருக்கவுங் குறுகிப் பாயுந்
தூலநன் னிழல்போ லுண்டா மாத்திரந் தோற்ற மான
ஞாலமும் பரமந் தன்னி னலம்பெறத் தோன்று மன்றே. 2

ஆதலாற் பரமந் தன்பா லகர்த்தனே கர்த்த னேயென்
றோதுபா வனைக ளுண்டா முற்றபற் றிலாமை யாலே
சாதமி லகர்த்த னாகுஞ் சந்நிதி மாத்தி ரத்தான்
மேதகு கத்த னுமிவ் விரண்டலால் வேறு மேவா. 3

அகத்தனிற் கத்தன் றன்னி லமைந்ததே ததனி னிற்பாய்
முகத்தமா மிரண்டு மின்றி முளைத்தெழு மாசை நீங்கி

மகத்தனி திரயாட் சிற்றி யகத்தனு விளம்ப நேரிற்
சுகத்தனு சிற்றி யேனு நன்றிது துயரோன் றில்லை. 4

முன்னிய கத்த னாகி யான்சக முறைசெய் கின்றே
னர்சிய நினைவி லாமை யாலதில் விகார மில்லை
யென்னது நான் செய்தேன் செய்திலே னென்னும் பார்வை
யுன்னிய பொழுதே துன்ப முடலைநா னென்பா ருண்டோ. 5

யொட்புட னுமென யென்னின் மூவேழு நாகு மஃதே
வெட்டவன் றயரா மேனு மெய்யையா னென்ன வேண்டா
வையமில் கேள்வி நல்லோர் நினைவரோ வனைத்தா மூனுங்
கையுறத் தின்ப மேனு நாய்ப்பிணைக் கவரார் நீசர். 6

நாமுட லென்னு மாசான் ஞானக்கண் குருடாய்ப் போகுந்
தோமுற மதனைத் தூரத் தூர்ப்பமேற் சோதி ஞான
மாமுகி விலாசி லப்போல் வயங்கிடு மினைய கண்ணா
லேமுற பிறவி வேலை யிருக்கரை யெளிது தோன்றும். 7

அனைத்திலுக் கத்த னல்லே னவனிவ னல்லே னென்ன
நினைத்துளத் துறுதி யாகி நிற்றியா லஃதின் றென்னி
லனைத்தினுக் கத்த னானே யனைவரு மதுநா னென்ன
நினைத்தசை வொன்று மின்றி நிச்சய மாகி நிற்பாய். 8

அன்றெனி லொன்று மல்ல வொன்றுநா மாகு மென்றே
நின்றவிப் பதத்தி னன்று நின்பதந் தனினீ நிற்பா
யொன்றெனும் பதத்தைக் கண்ட வுத்தமர் தன்பா னிற்பர்
துன்றுவா தனையே பந்தந் தொல்லைவீ டதனைத் தீர்தல். 9

புலன்களிற் பழகிச் சித்தம் பூண்டவா தனைகண் முன்னே
யலம்பெற மாற்றி வீட்டிற் கடுத்தவா தனையுந் தீர்வாய்
நலந்திக ழருள்சந் தோட நட்புதா சிநமிந் நாலு
மலந்தவிர் குணங்க ளாக மனத்தழுந் தாது செய்வாய். 10

உள்ளேறு தொழில்கண் முற்று மொருக்கியோ ருணர்வைப் பற்றி
மெள்ளவாக் கதுவு மந்தக் கரணங்க ளுடனே விட்டுத்
தள்ளரு மெல்லா மெத்தாற் றள்ளினு யதுவுந் தள்ளித்
தெள்ளுணர் வுள்ளஞ் செய்கை தேசிரு ளனைத்துந் தீர்ந்து. 11

வாதனை வடிவ மான வினைகளு மற்றி வற்றைப்
பேதமாப் பகரு மேனும் பிராணனி லியக்கந் தானு
மியாதுமூ லத்தோ டார்த்து விண்ணாக மென்ன நின்று
வியாதுநீர் சாந்த னுமென் னுயினை யதுந் மெய்யால். 12

உளத்தினி லனைத்து மாற்றி யுலகிலோர் பற்ற தின்றித்
துளக்கிலா நிலையி னின்றோன் றகளறு முத்த னாவா
னளக்கரு மீச னாவா னடன்மிகு சமாதி தானுங்
கொளத்தகு கருமந் தானுங் கூடினும் விடினு முத்தன். 13

இருதயத் தாசை யொன்று மிலாமையா லெண்ணப் பட்ட
கருமங்கள் செய்துந் தீர்ந்துங் கையுறு பயனொன் றில்லை
யொருவழிப் படாநின் கால முளமொருப் படுத லாலே
பெருகுவா தனைதீர் நெஞ்சிற் பேசுறு வனைத்தும் வேண்டா. 14

மறுகுவா தனைக ளர்ந்த மௌனத்தை யொழிய வேறே
ருறுகதி நல்ல தில்லை யுணர்வன வுணர்ந்த தாருந்
துழதிசை பத்துஞ் சுற்றி மீண்டதாந் தொல்லை ஞாலத்
தறுதியா யுண்மை கண்டோர் சிலர்நின்றே ரகத்தின் மாய்வோர். 15

தேகத்தை நோக்கி யன்றோ செகமெலாந் திரிவ தல்லா
லேகத்தை நோக்கி யன்றே யெங்கணும் பஞ்ச பூத
நாகத்தை மண்ணைக் கீழை நாடினு மாறு காணே
மோகத்தை விடுதே மென்றே திடமுற்றார் முழுதும் பற்றார். 16

பருத்த மன்றியே மற்றன தொழில்களிற் பற்றார்
தருத்தி யாகிய மேலவர் நெறியிலே சரிப்பார்
மிருத்தி யாணிரைக் தசைசடது மூளத்தினன் மிகுவர்
தொகுதி யானாட் பருண்முதற் குணங்களாற் சுடர்வார். 2

இடர்கை யாகிய துணைத்தின ரிழிவுயர் விரண்டு
சபக்க லாதவர் சமயுகோர் தன்னெறி நடப்போர்
விடக்கு மாறுதன் கரைகடா வேலையை யொப்போர்
மயக்கி லாதவ ரிரவிபோ னியதியை வழாதோர். 3

கொன்றாற் பாவது துடரிலா தவர்சீல குறகத்
தள்ளற் பாலது தியவர் நெறியெனுஞ் சழக்கே
யெள்ளற் பாலதா மூவகமே தியாமேவ ரென்றே
தெள்ளற் பாலது சூரவரா றறிவிறற் றீர. 4

வருந்து கிற்பது தனையறி நெறியிலே மனத்தாற்
றிருந்து கிற்பது கருமத்தி லழுந்திலாச் செய்கை
பொருந்து கிற்பது தியவ ரல்லவர் புணர்ச்சி
யருந்து கிற்பது நானென்ப தாக்குகிற் பதுவே. 5

நீர்க்கத் தக்கது நாம்பெறும் பெறுமுடற் றியக்கம்
பார்க்கத் தக்கது முழுதுயிர்க் குள்ளுறை பரம
மீர்க்கத் தக்கதே ரிரவியி னிடத்திலும் பாரி
னீக்கத் தக்கிலாப் புழுவினுஞ் சிதமொன்றே நிற்கும். 6

தாம தத்துட னிராசதஞ் சாத்திக மென்னு
நாம முக்குணப் பிறவியு முயற்சியா னண்ணுஞ்
சேம முத்தியைச் செய்திடுஞ் சாத்திகச் செய்கை
யிராம வுத்தம ராகவ வென்றுமீட் டுரைப்பான். 7

4. திதிப் பிரகரணம் முற்றிற்று.

ஆக விருத்தம்—766.

மித்திரராய்த் தெளிந்தோ ராகி, யமித்தமறு முத்தராய் ஞானிகளாங் குணமில்லா மவரைச் சேரும். 5

மெத்தென்ற சரித்திரத்தி னவர்தம்மை யுலகெலாம் விரும்புந் தன்மை, கொத்தொன்று மாழுங்கிற் குழலிசையான் மகிழ் விலங்கின் கூட்டம் போலு, மித்தன்மை யாவருக்கும் பொதுமை யிரு வியப்பயதா மிதனிற் பேறாய்ச், சத்தென்ற வழியிரண்டேம் படைத்திட்ட வர்க்கடர்றைச் சாற்றக் கேண்மோ. 6

தேசிகன்சொற் பிழையாம லநுட்டிக்கிற் பையப்பையத் திடக்க ரீகிப், பேசியசென் மத்தாத லடுத்தசில பிறப்பிலு லாதல் பேறும், மாசறவிற் பத்திசிறி துண்டாகு மாத்தாற்றன் மகநத் தாலே, பேசறுமா காசபலம் வீழ்வதுபோன் மெய்ஞ்ஞான மெளிதி லுண்டாம். 7

இவ்விரண்டி லாகாச பலம்போல மெய்ஞ்ஞான மியைந்த தன்மை, செவ்வியவர் ளான்முன்னோர் கதையாலே யான்செப்பத் திருத்தக் கேட்பாய், தெவ்வுலகி லாபத்தென் றொன்றுமிலோன் விதரணத்தோன் செல்வ மிக்கோ, னவ்வியமில் விதேகநா டரசாள் வோன் சநகனெனு மரசர் கோமான். 8

சற்குணத்தாற் கடலனையான் சக்கரத்தா னெனவுலகந் தாங்கு வீரா, னற்குணஞ்செய் வசந்தனு னறுமலர்சூழ் நந்தநத்தி னயந்து மேவி, தற்குரிய தந்திரர்கள் புறநிற்பத் தனியனாய்ச் சரிக் கும் வேலை, சிற்குரிய மநமுடைய சித்தர்கணம் பாடுவபண் செவியிற் கேட்டான். 9

வெறியாரும் பொருப்புறைவோர் விழிப்புலத்தின் மேவாதோர் விளம்பு கீத, நெறியார்மன் னவன்கேட்ட படியுரைப்ப நெடியவனே நினைவிற் கொள்வா, யறிவானு மறிபொருளுங் கூடியகூட் டாவி லெழு மறிவா நந்தம், பிறியாத வாங்மதத் துவத்தெழுந்த தாமதனைப் பேணல் செய்வாம். 10

லூற்று, னரக்கன்றி யவத்திலுழன் றலமருமிவ் வுலகிடையா னந்தோ வந்தோ, நிறக்கின்ற மயக்கத்தாற் கல்லிடைகற் போலு ருண்டு நெரிந்தே னந்தோ. 16

காலமொரு கான்முடியா திதனிடையெண் ணூறுண்டோர் கணமு மில்லை, சாலவிது தனைமதித்து வன்காத லிடைவீழ்ந்து தளர்ந் தேனுன், றூலமதி யாற்கெட்ட வெனைப்போல வீனரார் சொல்லற் பாற்றே, சிலமறு வாணவைப் பெரிதாக நினைவதே சிசி டந்தோ. 17

எல்லையிலா வண்டத்தி லியாவுமொரும் புவிநோக்கி லிறையு மில்லை, யல்லவுற மிதுபெரிதா வாதரித்து நிற்பதே யந்தோ வந்தோ, புல்லிடையிற் றினிதாகி யுதாரமாச் செயப்படாப் பொருளீ தென்னத், தொல்லுலகி லொருபொருளுங் காணேனித் தொடர்ச்சி நிலை யென்னே யென்னே. 18

தலைவர்தலை மேலுறைவோர் நாட்களிறைற் றூழ்ந்தோர்க்குத் தாழ வீழ்வர், நிலையில்பெரு மையையுறுதி நினைக்கின்ற நெஞ்சே யின் னினைவீ தென்னே, தொலைவில்பெரும் போகங்கள் பெரி யோர்கள் கிளையோடுந் தோன்றித் தோன்றி, யுலைவுறமாண் டார் முன்று னிக்காளிக் கிவையனைத்தி லுறுதி யென்னே. 19

மண்ணூடு மன்னவரு மவர்தாமு மாண்டனருண் மணலை யொக்கும்
விண்ணூடு மிந்திரரு மவர்வாழ்வும் போயினவிண் மீனை யொக்கு
மெண்ணூடும் பிரமருமண் டமும்பூதங் களுமிறந்த வெல்லை யில்லைக்
கண்ணூடு மவையெங்கே நின்வாழ்க்கை நிலையென்னே கவலு நெஞ்
சே. 20

செல்லாத மாயையிரு ளிரவிலே தேகமயத் தியக்க மான, பொல்லாத நீள்கனவாஞ் சூநியத்தி லிச்சையிறை பூண்டே னென்னிற், கல்லாத புல்லியனேன் சிசிநா னாகவரதங் காணு நாட்கு,

ளெல்லாம்போ யினபோமா லிரவாமேதான் றுய்நன்று மெழினுட் காணேன். 21

நடுவின்றுட விளிவுமி னன்றான பொருளொன்று ஞாலத் தில்லைப், படுபொருளெல் லாமறப்பா மலத்தினு லேபூசப் பட்ட தன்றோ, கடுவினைக ளுடோறுங் காய்துயரா நாடோறுங் கரை யொன் றில்லாக், கொடுமைகளே நாடோறுஞ் செய்கின்று ரறிவில் லார் நூரம்பைக் கூத்தால். 22

பாலகனு யஞ்ஞானத் தழுந்துவனற் காளையாய்ப் பாவை மாரார், சாலவுறுந் துவன்விருத்தன் றுனுகிக் குடும்பத்தாற் றளர்ந்து சாவ, னெலவிவ னெக்காலத் தென்செய்வான் மாயக்கூத் திருந்த வாறே, ஞாலமெலா மாடரங்காய்ப் பொறிமேள மாய்மநப் பேய் நடிக்கு மன்றே. 23

உள்ளத்தின் முடிமேலே யில்லாமை வீற்றிருக்கு முலகி லென்றாக், தெள்ளூற்ற நல்லறத்தின் சிரத்திலே யெப்பொழுதுந் திமை வாழு, மெள்ளற்ற வின்பத்தின் றலைமேலே துன்பங்க ளிருக்கு மென்றாற், கொள்ளத்தக் கனவான குற்றமிலாப் பொரு ளேது குறிப்ப ளேற்கே. 24

விழிப்பதுவு மிமைப்பதுவுஞ் சகத்தோற்ற மொடுக்கமா மேலோ ருண்டாற், பழிப்பரிய வன்னர்முன் னென்போல்வா ரென்னென்று பகரலாவ, ரிழிப்பரிய விசித்திரமாஞ் சம்பத்து மாபத்தா மிதயங் காயி, லொழிப்பரிய விசித்திரமா மாபத்துஞ் சம்பத்தா முள்ளம் வேண்டில். 25

வெம்மாய வாழ்வன்றே துயர்க்கெல்லாம் பிறப்பிடமாய் விளம்புகின்ற, தம்மாவிங் கிதனிடையே யழுந்துமவர்க் கின்பமுள தாவ தெங்ஙன், மைம்மாயை யென்னுமரம் பணையிலைபூ காய்பழத் தால் வரம்பற் றோங்க, விம்மால்செய் மநம்வேரா மிம்மநந்தான் சங்கற்ப மென்ப தாகும். 26.

சங்கற்ப நாசத்தா லெளிதாக மநநாசந் தானே யெய்து, மங்குற்ற மநமிறக்கிற் சநநமா ரணங்களு மாமு மாயு, மிங்கிப்பா லெனைத்திருநீங் கள்ளனைக்கண் டேன்கண்டே னிவன்போர் நெஞ்சம், பொங்குற்ற நெஞ்சத்தா னெடுநாளுந் தேனின்று பொன்றவிப்பேன். 27

இத்தனைநாண் மநமூத்தைத் துளைத்திலே னின்றுதுளைத் திலைபர்த தூலாற், சித்திரமாய்க் கோத்தணியென் முழுதுணர்ந்த தேசிகராற் றெளிந்தே னெல்லாஞ், சுத்தசட மாகந்தந் தோற்ற விக்கு நல்லறிவாஞ் சோதி பெற்றேன், மெத்தவிவ ளுனைதிங் கினையெனும்பொட் புள்ளொழிந்தேன் மீண்டு நாடேன். 28

பேதிக்கு மநமென்னும் பெரும்பகையை முழுவலியாற் பிளந்து வென்றேன, வாதித்த துயரெல்லா மாற்றினே னுபசாந்த வாழ்வு பெற்றேன், சாதித்த விவேகமே யுனை யணைகி னேனென்று சநகர் கோமான், சேதித்த மநவிலையெல் லாமொழித்துத தானேசித் திரம்போ னின்றான். 29

வாளாசித் திரம்போல நெடிதிருந்து சநகர்பிரான் மாய்ந்த நெஞ்சை, மீளாநல் லுபசாந்த நிறைநெஞ்சா லுலகியல்பை மேவிப் பார்த்தான், றாளாண்மை யாலியற்றும் பொருளேது கைக்கொள் ளத் தக்க தேது, கோளான கற்பனையென் சுபாவமறி வாமெ னக்குக் குறிக்குங் காலே. 30

சுத்தமாய்ச் சொரூபமா மென்னுருவ லால்வேறு தோன்றக் காணேன், உத்தியான் வாராத பொருணயவேன் வந்தபொரு ளனைத்துந் தள்ளேன், னித்தமாய்த் தன்னிலையி னிற்குமென் தறிவுருவி னிலையா நிற்பே, னுத்தவா றேதுவரு மதுவருக வென் றழுந்தி யொருமை யானான். 31

வானேறு கதிரவ னாட்டற்றம் வாடென்ன வந்து வந்து, தானேதோன் றிடத்தேர்ந்திலைப் பற்றின்றிச் செய்துமெனச் சநக னெண்ணித், தேனேய வருகாலஞ் செல்கால மிடையளவுஞ் சிந்தை செய்யா, ஞானேறு நிகழ்காலத் தோரிமைப்பி னகைதமிலா நிலாவ லுற்றான். 32

பேசிடுதல் விசாரத்தாற் சநகர்பிரான் பெரும்பேறு பெற்ற தல்லால், வாசிடன மற்றொன்றால் வந்ததல்ல வாசச மலர்க்கண் மாலே, யாசிலதாச் செயலியதாய்த் தனதான விசாரத்தா லடைவ தல்லாற், றேசிகரில் லாவினர் செய்தொழிலாற் பெறலாமோ சிற்சொரூபம். 33

பரப்பேறு களைவேண்டி யியற்றுகின்ற புண்ணியத்தைப் பவியி லுள்ளோர், சிறப்பான நல்லறிவு மிகவேண்டு மென்றுமுதற் செய்யிற் பேறு, மிறப்பான வாபத்து விளைநிலமா யிருந்துதுயர் வேலை யாகிப், பிறப்பான நச்சுமர வித்தாகும் பேதைமையைப் பிளக்கல் வேண்டும். 34

இலக்கியசிந் தாமணியா மிதயமெனுஞ் சரக்கறையி லிருக்கும் போதங், கலக்கமிலா விவேகியர்க்குக் கருதுபொருள் கற்பகம்போற் கனத்தி னல்குந், துலக்குவிசா ரம்படைத்துப் பேதைமைபோய் நல்லறிவு தோன்றி னோரை, விலக்குகவ சத்தோரை யம்புகள்போற் காமாதி விகற்பந் தாக்கா. 35

பரமாதித் தனைமறைத்துக் கறுத்தறிவற் றுக்களிந்துப் படர்ந்து மீண்டு, திரமான வகங்கார முகில்விவேக கக்காற்றாற் சிதறிப் போகும், வரமான பதம்வேண்டிற் றன்மநத்தி னுசைமுதன் மாற்ற வேண்டு, முரமான புவியைமுத லுழுதன்றோ விளைபயன்க ளுறுகின் றதே. 36

5—1. சநக ராசன் கதை முற்றிற்று

ஆக விருத்தம்—802.

## 5—2. புண்ணிய பாவநர் கதை.



மோக வற்சரா பிக்கொடி முளைத்தெழு மூலஞ்
சோக மாசண மிருந்தா சான்வதோர் சூழ
லாக மேழுத லிடமெனக் காணுமஞ் ஞான
மேக மாகிய படாடாந் தோன்றிரு விறக்கும். 1

அநித்த மிச்சக மென்பதை நாமொடாறு மகத்தி
னுணித்து நோக்கினச் சகலைப் போலநுண் ணறிவாற்
றனித்த மெய்ப்பொருள் பக்குவத் தறிகுவர் தூரத்தால்
பனித்த மாற்கரு மத்திரு நேவரால் வாரா. 2

சரத மஞ்சினர்க் கவருடை முயற்சியே சாணுத்
திரமு மிககிவ ஞொனனுஞ் சிறமைதான் சிதையி
லரக மாபுல கெங்குமாம் விசாலமுண் டாகு
மரணு றத்தன துயர்ச்சிதான் காண்பற வருமால். 3

வேறு.

பற்றவீ டென்றி ரண்டிற் பற்றலும் விடுத லுனு
முற்றவை மாத்து ரூப முயர்பந்த மதுவே றில்லை
முற்றறு பற்று வீட்டின் மோகமுந் துயரும் விட்டுத்
துற்றுள பற்று வீடு துடைத்தசை யாது நிற்பாய். 4

மயலின்மை யசித்த மின்மை மடமின்மை வருத்த மின்மை
செயலின்மை கரும மின்மை தியக்கின்மை விகற்ப மின்மை
பயமின்மை துவட்சி யின்மை பகையின்மை குறைவொன் றின்மை
கயமின்மை கடிர மின்மை கடிநமாய்க் கழற லின்மை. 5

வீடுபற் றிரண்டு நீத்த மேலவ ரிடத்து மேவி
நீடுசா தனைக ளின்றி நிகழ்த்திய குணங்க ணிற்கும்

